[18th February 1959

10-20 a.m. SRI A. V. P. ASAITHAMBI : இது இப்பொழுது மிகவும் முக்கியமான பிரச்னையாக இருந்து வருவதால் இதன் பேரில் அரை மணி நேரம் விவாதிப்பதற்கு அனுமதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

*Death of Pagadala Venkatarathnam in London*

* 5 *S.N.Q.*—MR. SPEAKER : This question was not circulated. However, I have permitted the hon. Member Sri Anbazhagan to put it. I shall read the question.

SRI K. ANBAZHAGAN : " Will the Hon. the Minister for Home be pleased to state the following :—

(*a*) whether the Government received any intimation from the office of the Indian High Commissioner, London, or any other source about the death of one Pagadala Venkatarathnam; and

(*b*) if so, the date on which it was received and the date on which it was intimated to the concerned people, i.e., parents or guardian? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir. A telegram was received from the High Commission of India, London about the death of Pagadala Venkatarathnam, asking the State Government to convey the news to his father, Sri P. Laxmipathy at No. 6, Thandavarayagramani street, Tondiarpet, Madras-21; and

(*b*) the telegram was received late on 16th January 1959. The Commissioner of Police, Madras was asked on 17th January 1959 to communicate the news to the father. Enquiries were made by the Police on the same day, i.e., on 17th January 1959 but the father was not found on the address given in the telegram and his whereabouts could not be traced. After a news item appeared on 12th February 1959 in the Madras 'Mail' about the death of P. Venkatarathnam, the mother was traced by the Police with the assistance of the Editor, Madras Mail, and the information was conveyed to her on 13th February 1959.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, 13–1–59 அன்று லண்டனில் இறந்துபோன செய்தி இங்கு 16–1–59-ல் கிடைத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்குப் பின்னால் இந்த செய்தியை ஒரு மாதத்திற்குப் பின்னால்தான் இறந்துபோனவரின் தாயாரிடம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இறந்து போனவரின் குடும்ப விலாசம், அவருக்கு பாஸ் போர்ட் கொடுக்கப்பட்டிருப்பதால் அந்தப் பாஸ்போர்ட் இலாகாவினிடம் இருந்தும், அந்த பாஸ்போர்ட்டுக்காக ஜாமீன் கொடுக்கப்பட்டிருப்பதால் தாயாருடைய பெயரும், முகவரியும் இருந்துங்கூட இதை உடனே அறிவிப்பதற்கு அரசாங்கம் என் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை? இறந்து போனவருக்கு தகப்பனார் இல்லையென்றால் அவரது உறவினர்களை கண்டுபிடித்து அறிவிக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமையல்லவா? சுமார் இருபது நாட்களுக்குப் பின்னால் மெயில் பத்திரிகையில் இந்த செய்தி வெளிவந்த பிறகு, இந்த விவரத்தை அறிந்து அவர்களிடம் இவ்வளவு காலதாமதம் செய்து அறிவித்தது பெருந் தவறு என்பதை அரசாங்கம் உணருகின்றதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஹைகமிஷனரிடமிருந்து வந்த செய்தியில் குறிப்பிட்டிருந்த விலாசத்தின்படி விசாரித்ததில் சரியான விலாசம் கிடைக்கவில்லை. அதற்குப் பின்னால் சரியான விலாசம் தெரிந்த உடன் அவர்களிடம் உடனே அறிவிக்கப்பட்டது.

18th February 1959]

Sri M. KALYANASUNDARAM : போலீஸாரால் விலாசத்தை உடனே கண்டு பிடிக்க முடியவில்லை என்றால் பத்திரிகை மூலமாக இதை உடனே அறிவித்திருக்கலாமல்லவா ? அவ்விதம் ஏன் போலீஸார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இந்தச் செய்தியை பத்திரிகை மூலமாக அறிவிக்க வேண்டுமென்று போலீஸாருக்குத் தோன்றவில்லை. அவ்விதம் தோன்றியது தவறு என்று அரசாங்கம் கருதவில்லை.

Sri A. A. RASHEED : Sir, has the attention of the Government been drawn to the statement of the mother of the deceased that she had not changed her address?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I have no information, Sir.

Sri K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, லண்டனில் இறந்து போனவர், திடீரென்று ஏற்பட்ட விபத்து 'ஆக்ஸிடெண்டு' காரணமாக இறந்து போனபின், அவருடைய உடல் ஏறக்குறைய 17 நாட்கள் வைக்கப் பட்டிருப்பதாகத் தெரிந்தும், அதைப்பற்றி அவருடைய பெற்றோருக்கு எப்படியாவது செய்தியை அறிவிக்கவேண்டும் என்ற அக்கறை அரசாங்கத்திற்கு இல்லாததற்கு காரணம் என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அவ்வாறு அவருடைய சொந்தக்காரர்களுக்கு தெரிவிக்க வேண்டும் என்றுள்ள அக்கறை அரசாங்கத்திற்கு இல்லாமல் இல்லை.

*Scarcity of kerosene*

Mr. SPEAKER : This question also was not circulated and I will read it.

* 6 *S.N.Q.*—Sri S. LAZAR : Will the Minister for Home be pleased to state—

(i) whether the Government are aware of the sudden scarcity of kerosene in the market and the consequent difficulties to which the public are being subjected;

(ii) and if so, the remedial measures that are being taken by them?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (i) & (ii) The Government of India imposed a 5 per cent cut during the six month period July to December 1958, on the quantity of kerosene sold by major oil companies in view of acute foreign exchange position. Some time towards the end of December 1958 an impression gained ground that there would be a shortage in the stock of kerosene and there occurred a certain amount of panic buying of kerosene in many parts of the State, creating an artificial high demand resulting in sudden scarcity of kerosene. The retail-dealers and hawkers exploited the situation and raised the retail price of kerosene sold to the public. In Madras City, the retail-dealers were reported to have stopped selling kerosene during the last week of January 1959, on the plea that they had not received supplies. Thus the rise in selling prices was due to the activities of unsocial elements and were quite out of proportion to the gap